

# தமிழ் இசைச் சங்கம், சென்னை

ராஜா அண்ணாமலை மன்றம்

பண் ஆராய்ச்சியின் இருபத்து இரண்டாம் கூட்டம்

25—12—71 சனிக்கிழமை முற்பகல்

# நொண்டி நாடகமும் அருள்மலை நொண்டியும்

செந்தமிழ்க் கலைச்செல்வர் பெ. தூரன்



# தமிழ் இசைச் சங்கம், சென்னை

## ராஜா அண்ணாமலை மன்றம்

### பண் ஆராய்ச்சியின் இருபத்து இரண்டாம் கூட்டம்

25-12-71 சனிக்கிழமை முற்பகல்

# நொண்டி நாடகமும் அருள்மலை நொண்டியும்

செந்தமிழ்க் கலைச்செல்வர் பெ. தூரன்

ஒரு கள்வனைக் கதையின் முக்கிய பாத்திரமாகக் கொண்டு பாடல் எழுதுவது விநோதமாக இல்லையா? நொண்டி நாடகங்களெல்லாம் கள்வனைத்தான் கதாநாயகனாகக் கொண்டிருக்கும். இந்த நொண்டி நாடகங்களுக்குப் பொதுவான ஓர் இலக்கணம் உண்டு. அதைச் சுருக்கமாகக் இங்கு காண்போம்.

திருடன் ஒருவன் ஏதாவது ஓரிடத்தில் கொள்ளையடிப்பான். அவன் திருட்டுப் பலித்துவிடும். ஏராளமான பொருள்கள் அவன் வசமாகும். அவன் ஒரு விலைமகளின் ஆடல்பாடல்களைக் கண்டு அவள் வீடு சேருவான். கையில் உள்ள பொருள்களையெல்லாம் விரைவிலே கவர்ந்து கொள்ளுவார்கள். பிறகு அவன் தெருவிலே நிற்கவேண்டிய நிலைவரும். விலைமகளிர் மீது வசை பாடுவான். அவர்களை வெறுப்பான்.

மறுபடியும் தனது திருட்டுத் தொழிலை மேற்கொள்வான். இரண்டாவது திருட்டும் பலித்து விடும். பொன்னும் மணியும் கைக்கு வந்தவுடனே அவனுடைய எண்ணம் முன்பு தன்னைத் தெருவிலே ஓட்டிய அந்த விலைமகளிடத்திலே செல்லும். அவள் வீடு சேருவான். திருட்டால் கிடைத்த செல்வத்தை மீண்டும் இழந்து விடுவான். பிறகு என்ன? மீண்டும் தெருவில் நிற்க வேண்டியது தானே?

மூன்றும் முறையாக அவன் திருடச் செல்லுவான். இந்த முறை அவன் திறமையெல்லாம் பலிக்காமல் அகப்பட்டுக் கொள்வான். குதிரையைத் திருடியதால் அவன் தப்ப முடியாது போகும். அரசு ஆணையின்படி அவனுடைய மாறு கை, மாறு கால் இவற்றை வெட்டி விடுவார்கள்.

இந்த வேளையில் அவன் தன் செய்கைகளை நினைத்து வருந்துவான். சான்றோர் ஒருவர் காயத்திற்கு மருந்திட்டுக் கட்டுவார். ஒரு குறிப்பிட்ட தலத்திற்குச் சென்று இறைவனைத் தொழும்படி அறிவுரை கூறுவார். திருத்தலத்தில் அமர்ந்துள்ள இறைவனை உள்ளமுருகித் தொழுது கிடப்பான். இறைவனின் அருள் அவனுக்குக் கிடைக்கும். என்றும்போல் கையையும் காலையும் அவன் பெறுவான். பிறகு நல்வாழ்க்கை வாழத் தொடங்குவான்.

நொண்டி நாடகம் ஒரு திருடனைப் பற்றியதாக இருந்தாலும் அவன் வணங்கிய திருத்தலத்தில் உள்ள இறைவனின் பெருமையை எடுத்துச் சொல்வதாக முடியும். பொதுவாக நொண்டி நாடகங்களெல்லாம் சுயசரிதையாக நாட்டுப்பாடல் முறையில் எளியநடையில் இயற்றப்படும். நொண்டியாலேயே நடித்துப் பாடவும் பெறும். இதுவே நொண்டி நாடகத்தின் பொதுவான இலக்கணம். சிற்சில வேறுபாடுகளும் ஆங்காங்கு இருப்பதுண்டு. சிந்தாகவே பெரும்பாலும் இருக்கும். இடையிடையே வெண்பா, விருத்தம் போன்ற செய்யுள் வடிவங்களும் இருக்கும்.

தமிழில் உள்ள நொண்டி நாடகங்கள் :—1. திருச்செந்தூர் நொண்டி நாடகம் 2. சீதக்காதி நொண்டி நாடகம். 3. சாத்தூர் நொண்டி நாடகம் 4. குளத்தூர் ஐயன் நொண்டி நாடகம். 5. திருமலை நொண்டி நாடகம் 6. பழநி நொண்டி நாடகம் முதலியன.

ஏட்டுப் பிரதியிலிருந்து பெயர்த்தெழுதி இங்கே விளக்கப் படுவது திங்களூர் அருள்மலை நொண்டி நாடகம்.

அருள்மலை நொண்டி, கொங்கு நாட்டில் ஈரோட்டிற்குச் சுமார் 15 கல் தொலைவில் உள்ள அருள்மலையில் கோயில் கொண்டிருக்கும் முருகன் பெருமையைக் கூறுகின்றது. சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பெற்றது. ஆசிரியர் பெயர் அவிநாசி நாவலன்.

செங்குந்தர்கள் தம்
குலக்கொழுந் தான குள்ளையன் தனயன்
இலக்கணத் தொகையால் இனியவி ஞசி
நாவல ஞனவன் நன்னூல் தெரிந்து
பாவின மெழுத்தும் பயனரைச் சீரும்
பந்தம் அடிதொடை பகர்ந்த செந்தொடையால்
செந்தமிழ் மாலையைச் சேர்க்க வல்லவன்
எழுத்தின் விகற்பமும் இயைபுக ளெல்லாம்
பழுதறப் பார்த்துப் படித்த கம்பீரன்
பஞ்சகா வியங்கள் படித்த நாவலன்குகன்
கஞ்சமலர்ப் பதங்கள் கருத்திற் சேர்ப்பவன்

என்று ஆசிரியரே முடிவுரையில் எழுதியுள்ளார். இந்நூலின் ஏட்டுச் சுவடியை எனக்கு அன்புடன் அளித்தவர் புலவர் குழு உறுப்பினராகிய வித்துவான் வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் ஆவார்கள்.

அருள்மலை நொண்டியின் பெயர் பகல்வெத்தி. ஐந்து தலை முறைகளாக மதுரையில் வாழ்ந்து வந்தவன். இவன் மனைவி யுடன் கோபித்துக்கொண்டு கொங்கு நாட்டின் ஒரு பகுதியான குருப்பு நாட்டிற்கு வருகிறான்.

கல்லுருக்கு மந்திரமும் கற்றேன்—திருட்டுக்
கன்னக் களவு செய்ய வல்லவனுமானேன்

என்று அவனே சொல்லுகிறான்.

பகல்வெத்தி இளமையில் நொண்டியாக இருக்கவில்லை. நல்ல அழகு வாய்ந்தவன். இவனுடைய பெருமையை அவனே கூறுவதைக் கேளுங்கள்:

நீர்மேல் நடந்திடுவேன்—நட்டாற்று
நீச்சலி லேவெகு பாச்சனையா
ஆர்தான் எனக்கு நிகர்—பெரிய
ஆனையை மாலையாகப் போடுவேனையா
வானத்தை வில்லாக—எனக்கு
வளைக்கின்ற தொழிலது பழக்கமையா
வாறுற்ற மணலதனைக்—கையால்
வருத்தமில் லாமற்கயிறு திரித்திடு வேன்
பந்தயப் பேச்சாலே—கணத்தில்
பறக்கவே நான்வெகு சமர்த்தனையா

பகல்வெத்தி ஒரு சாதுவைப்போல வேடமணிந்து சென்னி மலைக்குப் புறப்படுகிறான். இவன் நல்ல நகைச்சுவை உணர்ச்சி மிகுந்தவன். அவன் கூறுவதைக் கேளுங்கள் :—

புசமேல் தரித்துக்கொண்டேன்—மெய்யில்
பூசிக்கொண்டேன்கையை வீசிக்கொண் டேன்
சங்கும் சேகண்டியும்—உத்திராக்ஷம்
தரித்துக்கொண் டேன்மனதில் சிரித்துக்கொண் டேன்
செங்கையில் பிரம்பெடுத்தேன்—மார்பில்
செச்சையுட னேலிங்கம் வைச்சுக்கொண் டேன்
பார்த்திள மயிலிரட்டை—திருநீற்றுப்
பையுமுத்தி ராக்ஷங் கையிலெடுத் தேன்
பாதக்குறட்டு மேலே—சுருக்காய்ப்
படக்குப் படக்கென்று நடக்கையிலே
வீதியில் கண்டபேர்கள்—காலில்
வீழ்ந்தா ரேசுத்திச் சூழ்ந்தாரே
கொடுத்தேன் திருநீற்றை—கைகட்டிக்
கொண்டு குனிந் தேமெள்ளத் தண்டனிடுவார்
படுப்பார் எழுந்திருப்பார்—திருநீற்றைப்
பாங்குட னேமெள்ள வாங்கிக்கொள்வார்.

அவனை உண்மையான சாது என்று நம்பி ஒருவர் தம் வீட்டில் விருந்துக்கு அழைக்கிறார். அன்னமிட்ட வீட்டில் கன்னமிடுவது அவன் தருமமாம். அதனால் இரவிலே விருந்துண்ட பிறகு அங்கேயே உறங்கும்போது தன் தொழிலை நடத்துகிறான். ஏராளமான பொருள் கிடைக்கிறது. அதை வைத்துக்கொண்டு பல ஊர்களுக்கு புறப்படுகிறான். இறுதியில் பவானி வருகின்றான்.

அங்கே கோயிலில் ஒருத்தி நடனம் ஆடுகிறாள். அவள் நல்ல அழகி. கிருஷ்ணன் கண்டால் அட்ட லக்ஷ்மிகளையும் விட்டு விட்டு இவளைத் திருமணம் செய்து கொள்வானாம். பாட்டைக் கேளுங்கள் :—

இட்டமுடன் கிருஷ்ணன் கண்டாலோ—லக்ஷ்மி
எட்டுப் பேரை விட்டுத் தாலி கட்டிக் கொள்ளுவானே
சட்டமுடன் தந்திமுகன் கண்டால்—நல்ல
தாரமென்று கலியாண காரியஞ் செய்வானே
மாதவர் மகாமுனிவர் கண்டால்—தவம்
மாற்றியவள் வீடுதனில் காத்துமிருப் பாரே

பாதச் சிலம்பு கலீ ரென்ன—பதம்
படித்துப் படித்துக் கொண்டுநடித்துக்கொண் டாளே

அவள் வீடு சேர்கின்றான். தன் உடமைகளையெல்லாம் விரை விலே இழக்கிறான்.

பிறகு காசிக்குச் சென்று காசிராஜன் அரண்மனையிலே ஏராளமான பொருள்களைக் கொள்ளையடித்து வருகிறான். வெளியில் வரும்போது அங்கு உறங்கிக்கொண்டிருந்த காவலாளி களின் முகத்திலே காரி உமிழ்ந்துவிட்டு வருகிறான்.

மறுபடியும் பவானி வந்து அதே விலைமகள் வீட்டிற்குச் செல்கிறான். சில மாதங்களில் களாவடிய பொருள்களெல்லாம் தீர்த்துவிட்டதால் மீண்டும் திருட்டுத் தொழிலைத் தொடங்கப் புறப்படுகிறான்.

இந்தத் தடவை மைசூர்ப் பக்கம் நடந்தான்.

அங்கே ஓரிடத்தில் குதிரை வீரர்கள் பாளையம் இறங்கி யிருந்தார்கள். கண்ணைக் கவரும் குதிரைகளைக் கண்டவுடனே அவனுக்கு ஒரு குதிரையைத் திருட ஆசை பிறந்தது. யாரும் அறியாதவாறு இரவிலே உள்ளே நுழைந்து ஒரு குதிரையை அவிழ்த்து அதன்மீது ஏறுகிறான். ஆள் புதியவனாக இருக்கக் கண்ட குதிரை மிரண்டு குதித்தது. பகல்வெத்தியால் அதை அடக்க முடியவில்லை. வீரர்கள் விழித்துக் கொண்டார்கள். பகல்வெத்தி பிடிபட்டான்.

அரசனுடைய ஆணைப்படி மாறு கை மாறு கால் துண்டிக் கப்படுகிறன. பகல்வெத்தி அழுது புலம்பிக்கொண்டு ஒரு காட்டில் கிடக்கிறான். அருள்மலையைத் தரிசிக்க வந்த வட நாட்டு மக்கள் சிலர் அவனைக் கண்டு ஆறுதல் கூறிப் பச்சிலை வைத்துக் கட்டுகிறார்கள். பிறகு அருள்மலையின் சிறப்பைக் கூறி அங்குச் செல்லுமாறு சொல்லிச் செல்லுகிறார்கள்.

பகல்வெத்தி அருள்மலை முருகனை மனமுருகிப் பாடுகிறான். அவனுக்கு முருகன் அருளால் கைகால் வளர்கின்றன. அருள்மலை திங்களூருக்கு அருகில் இருப்பதால் அவனைத் திங்களூர் நொண்டி என்றும் கூறுவார்கள். பாடலைக் கேளுங்கள் :

திருமகள் மருகா சேனை பதியே
முருகனே ஆறு முகவனே பரனே
மோன மந்திரத்தில் முளைத்த செந்திருவே

கானகக் குறத்தி கணவனே குகனே
குஞ்சரி கணவா குமரா காங்கேயா
சஞ்சல மகற்றும் சடாச்சரப் பொருளே
ஐயுங் கிலியு மான பரனே
மெய்யுங் கிலியும் வீற்றி ருந்தவனே
கண்ணுக் குள்ளே கருணைச் சுடரே
விண்ணுக் கப்பால் வெளியிலுற் றவனே
தசைநரம் புக்குள் வீற்ற மெய்ப் பொருளே
திருநீ றணிந்துன் திருத்தாள் படவே
வருவாய் வருவாய் மயிலே றியவா
பெற்றதாய் தந்தை பிள்ளையை வெறுத்தால்
மற்ற தாய்தந்தை வளர்த்தின துண்டோ
அன்னையும் நீயே அப்பனும் நீயே
என்னுள் ளத்தில் இருப்பவன் நீயே
ஏசுவ துனையே புகழ்வது முனையே
பேசுவ துனையே பிதற்றுவ துனையே
சொல்வ துனையே துதிப்பது முனையே
வல்வினை யதனல் வருந்தினே னுன்சரண்
வேலா யுதனே வெண்ணீ றிடவே
காலது வளரக் காட்சிதந் தருள்வாய்
என்றுதான் போற்ற இறையவன் அருள்சேர்
குன்றிலே கைகால் கொடுத்துமுன் னெனக்குப்
பேர் நொண்டி யென்று பெருமையாய்த் திங்கள்
ஊர் நொண்டி யென்றேர் பேர்கொடுத் திடவே

கால் கைகள் வளர்கின்றன. பகல்வெத்திதன் மனைவிமக்க ளோடு இன்பமாக நல்வாழ்க்கை நடத்தத் தொடங்குகிறான்.

வாழி வாழியென்று மங்களகரமாகக் கதை முடிகிறது.

அ ரு ள் ம கோ மெநா வன் டி

— முக்கியோன் —

அ வி ஞ் சி நா வ ல ன்

ஏட்டுப் பிரதியிலிருந்து பெயர்த்து

— எழுதியவர் —

ம. ப. பெரியசாமித்தூரன்

அருள்மலை நொண்டி

விருத்தம்

கன்னலென மிருதுவசன மொழிகள் பேசுங்
கன்னியரும் அருள்மலைக காவலனை பாதம்போற்றி
மின்னலெனக் கன்னக்கோலிடையில் வைத்து
விருப்பமுடன கச்சை கட்டி மெய்யாகச்
சொன்னமயமான நிஜார் அங்கிதொட்டுச்
சோபமுறு மாயச்சொக்குப் பொடியுங்கொண்டு
மன்னு தஞ்சாவூர்த் தமிழ்க்கன் மதுரை எத்தன்
வணங்கு பகல் வெத்தி நொண்டி வந்துற்றேனே

சிந்து

காலுக்கு வீரதண்டை பூட்டி — நொண்டி
காங்குச சல்லடந்தொட்டுக கச்சைகட்டி னேனே
மேலுக்கு அங்கராக்குத் தொட்டு — நல்ல
வெற்றிபெற நெற்றியில்கஸ் தூரிப் பொட்டுமிட்டு
குல்லியுந் தான்தரித்துக கொண்டு — நொண்டி
கூத்தாடக் கையிலொரு மாதிரைக கோலதண்டு
வல்லாள கண்டனென் தகப்பன் — ஊர்க்கும்
வலுத்த மறவர்தம் குலத்தில் உதித்தவன்
மாயப் பூரணப் பலதேவன் தம்பி — சின்னன்
மறவர்வளவில் நாங்க உறவுகொண் டாடி
காயகமும் கற்றசின்னத் தேவனை — தந்த
கன்னிகையைக் கலியாணம் பண்ணியே கொடுத்தான்
மாமதுரைப பட்டிணத்தில் நாங்கள் — குடி
வந்து யிளைந்து தலைமுறை யிருந்தோம்
நாளும் மன்னயாருடன சேராடி — குருப்பு
நாட்டுகளுள்ளே வெகு ஓட்டமாய் வந்தேன்
கல்லுருக்கு மந்திரமும் கற்றேன — திருட்டுக்
கன்னக்களவு செய்ய வல்லவனு மானேன்
பாதாள அஞ்சனமுங் கற்றேன் — மாயப்
பறவைச் சனத்தையும் திறமையாய்ப் படித்தேன்
வேதாளந் தன்னையும்வெல் வேனே — வெகு
விசையுடன் கூத்தாடத் துசங்கட்டி னேனே

விருத்தம்

அதிமதுர வாக்கியஞ்சொல் கவிஞர் போற்றும்
அருள்மலைவே லாயுதம் அன்பாய்ப போற்றி
மதிநதிவேணி சடைமுடித்த சந்திரநாதர்
மலரடியும் அனுதினமும் மறவா தேற்றி
வீரன்கைச் சிலையொடித்த அந்தமாயன்
மெய்பொற் பாதத்தை விரும்பி வேண்டி

சதிகளவு செய்யவுங்கோண டக்குக்காளி
சந்நிதியில் வரங்கேட்கத் தானவந் தேனே

சிந்து

காளிகற் பகபாலி—கிருபையருள்
கஙகாளியே நல்ல பொய்ககாளியே
ஆதிரூ மூலமேகமும — போறறிடும்
அந்தரி யேசிவ சுந்தரியே
நாரணி கெளமாரியே — அகிலாண்ட
நாயகி யேநல்ல தாயகியே
பூரணி கலைவாணி — நலமேவும
பூததி யேவிநது நாதத்தியே
முத்தித் திருவருளே — அருளிய
மோனததி யேசிவ ஞானத்தியே
பததுப் பராசக்தியே — தன
பாரதது யேபதி பாசததியே
பாலும பழம போல — திருடப்
பலித்தே நாளும கெலிததாலே
நாலில ஒருபஙகு — உனக்கு
நான்தரு வேனே புராந்தகியே
என்றே உபசாரம — சொல்லி
எண்டிசை நோக்கியே தண்டனிட்டனே
ஒன்றே எனககு வரம — கைமுன்னே
பிரககம தாகவேகேட்கு முன்னே
கலகலென உததிரமும — சொன்னது
கண்டனள்காளி விண்டனம்மா ஏடு 20,
வலதுபக கததுகெவுளி — உடனே
வாககருள் வாயென்று கேட்குமுன்னே
வாய்மை லடித்தாப் போல் — சொன்ன
மாததிர மேவழி பார்ததையா
மாயச்சொககுப பொடியெடுத்தேன — நல்ல
மநதிரஙகற்றேனகளளர் தந்திரங் கறறேன
நீர்மேல் நடந்திடுவேன் — நடடாற்று
நீச்சலி லேவெகு பாச்சலையா
ஆர்தான் எனககு நிகர் — பெரிய
ஆனையை யாரையாகப் போடுவேனையா
வானத்தை வில்லாக — எனக்கு
வளைக்கின்ற தொழிலது பழக்கமையா
வாறுற மணலதனைக் — கையால்
வருததமில் லாமற்கயிறு திரித்திடுவேன்
பந்தையப் பேச்சாலே — கணத்தில்
பறக்கவே நானவெகு சமாததையா
சந்தோஷ மாச்சதென்று — தொடை
தட்டியே முத்தம இட்டேனே

விருத்தம்

தண்டமிழ் விளங்குகின்ற சந்திர புலவன்போலக்
குண்டலந் தரித்துக்கொண்டு குகனிரு ப
யண்டுள கிழவன்போலப் பண்டார வேஷ
கொண்டுதான் தெற்குநோக்கிக் குறிப்புட

சிந்து

வருகிற வழிதனிலே — கூடணத்தில்
வைத்திருந்த தோடா விடத்தேற
திருவுளச் செயலெனவே — திருட்டுச்
சீக்கிர மாகவே வாய்க்குமென்றே
பின்னேயும நாலடிதான — வருகையில்
போதஜ வமானதைப் பார்த்தேயா
என்னுட யோகமென்றே — மனதில்
எண்ணிக்கொண் டேன்பூசை பண்ணிக் கொண்டேன்
கெருடன வடயாக — துடைதட்டிக
சேககையிட்டுச சகுனம பாரககையிலே
மறுபடி பால்குடமும் — வந்து
வாச்சுது மத்தியான மாசகுனந்தே
விசயாபுரி கடந்தேன — செனனிமலை
வீதிகண் டேன விபூதி கொண் டேன
புசமேல் தரித்துககொண்டேன — மெய்யில்
~~பூசிக்கொண் டேனமனதில் சிரித்துககொண் டேன~~
பூசிககொண டேனகையை வீசிககொண டேன
சவுய சேகண்டியும் — உத்திராக்ஷம
தரித்துககொண டேனமனதில் சிரித்துக்கொண் டேன
செவைகயில் பிரமபெடுதேனன — மாாபில்
செச்சையுட னேலிஙகம வைசசுக் கொண டேன
பார்த்திள மயிலிரடவை — திருநீற்றுப்
பையுருத்தி ராக்ஷங் கையிலெடுத் தேன
சூத்திரசாதி யென்றே — தெரியாமல்
துலுக்கரும் கனனடப் பேச்சுப் பிலுக்கிக் கொண்டேன்
பாதக்குறட்டு மேலே — சருக்காய்ப்
படக்குப் படகெனறு நடக்கையிலே
வீதியில் கண்டபோர்கள் — காலில்
வீழ்ந்தா ரேசுத்திச் சூழ்ந்தாரே
கொடுத்தேன திருநீற்றை — கைகட்டிக
கொண்டிருந் தேமெல்லத் தண்டனிடுவோர்
படுப்பார் எழுந்திருப்பார் — திருநீற்றைப்
பாங்குட னேமெள்ள வாங்கிக் கொள்வார்
பாரப்பார்கள் அகத்தினிலே — வருகையில்
பண்டாரந் தன்னைவந்து கண்டார்களே
கும்பிடுவோர் சிலபேர் — அவ்விடத்தில்
குப்பையன் தமபிசின்னச் சுப்பையனும்
வீட்டுக்கு வாருமென்றே — கூட்டிப்போய்
விருந்துக்கு நீங்களும் இருஙகளென்றே

கூட்டுக் கறியுடனே — கத்திரிக்காய்
குழம்புக் கறியும் வெகு நலம் பெறவே
பதினெட்டுக் காய்கறியும் — வகைவகை
பணைத்தே அன்னமுங் கொடுத்தானே
கெதிகெட்டுப் போனவன் போல் — எனைவந்து
கேட்டானே யிலை போட்டானே
உப்புத் திருமஞ்சனம் — வற்றல்வகை
உள்ளதெலா மிலை அள்ளி வைத்தான்
வைப்பனை வாழ்த்திக் கொண்டே — நானும
வாய்ப்புடன் சாப்பிட்டு ஏப்ப மிட்டேன
கொண்டேன அதன் பிறகு — பாப்பான்
கொடுத்ததன் அடைக்காய் மடிக் கையிலே
உண்டவீட் டுக்குரண்டகம் — செய்தல்
உள்ளது நமக்கிது நல்ல தென்று
மாமறை தனைப் படித்த — சுப்பையன்
மனையாட்டி யுமவெகு பணி பூட்டி
நேமக மாகவுமே — அவளும
நித்திரை செய்ததனை மெத்த நினைத்தேன
அர்த்த சாமந்தனில் — எனகரு
அன்ன மிட்ட வீட்டினில் கன்னமிடவே
நித்திரை தனை வெறுத்தேன — கதவை
நெம்பிவைத் தேன்வெகு தெம்பு வைத்தேன
பேதந்தேன் மனைதனிலே — அவள்தன்
பொன்னுடைமை தனைக்கண் டென்னுடைமை யென
ருய்ந்தேன் உடமைவகை — அதற்குநான்
அட்டவணை எழுதினேன் சட்டமுடனே
கொந்தள வோலைகளும் — சடலினை
குப்பியுட னேநல்ல சரப்பணியும்
வந்திதோள் வசங்கியுடன் — தங்க
வளையல்கள் சரவல்லிக் கூனை முருகும
அபரஞ்சி யாலிழைத்த — பதக்கத்தில
அணி முதலைக் கண்டுதி ராணிவைத்தேன
சவைரஞ் சிதமான — குடமணித்
தாவட மும்பவளத் தாவடமும்
பாடகங் கொலுசு தண்டை — கால்சரப்
பணியுந் தண்டரள மணியுடனே
சூடகங் கைக்கடயம் — தங்கச்
சட்டியுட னேநல்ல அட்டிகையும்
பலபல அணிகளெல்லாம் — பதையாமல்
பறித்தே னேவெகு திறத்துடனே
கலைமகள் கவிதெய்வமாம் — சுப்பையன்
கண்டா வளியுடன் முண்டா செடுத்தேன்
நித்திரை செய்யு மென்றேன் — உங்களுக்கு
~~அதனையும் பறித்தேன்~~
நினைவான போதிலென்னை நினையு மென்றேன

அததனையும் பாிததேன — சாமபலை
    அடிததே னோடட மெடுததேனே
வறுமைகள தீரநத பிதனறே — சிவமலை
    வழியா லேவெகு தெளிவுடனே
அறியா தவன போலே — காஙகயம
    அடுததே னபதம படிததேனே
பாரோர் புகழுகின்ற — காடையூர்
    பண்ணோடு வார்புகழ் பொன்னூதியூர்
தாரா புரங் கடந்தேன் — பழநித்
    தலத்துக்கு வந்து தருணுங் கெவித்தேனே

விருத்தம்

அருள்மலைக் குகனைவாழ்த்தி ஐயர்தென் பழநிவேலர்
திருவடி பதமலைக்கணடு தியானமாய்த் தெண்டஞ்செய்து
மருள்மல றுரவ் திணடுக்கல் வழியது கடந்தாயினடு
பெருமைசேர் மதுரைகண்ட பிரபலஞ் சொல்லுவேனே

சிந்து

கோட்டை கொத் தள மதிலும — நல்லநல்ல
    கொம்மைக ளுமசித்திரப் பொம்மைகளும
நாட்டும புகழ் படைத்த — வைகை
    நதியழ கும்மதுரைப் பதியழகும்
கண்டேன சொககநாதரை — மனமாரக
    கருத்தினி லேநா னிருத்திக் கொண்டேன்
விண்டலம் புகழுகின்ற — மதுரை
    மீனாட்சி கடாசசி யெனுசசி யென்றேவ
பாதம பணிந்து கொண்டேன் — மதுரைப்
    பதியி லிருந்துவைகை நதிகடந்தேன்
ஊரும் புகழ் படைத்த — கள்ளழகர்
    உபய பாதயிருக்குஞ் சபையுங் கண்டேன
பாவம பறி கொடுததேன — அழகரைப்
    பணிந்து தீர்த் தந்தொளசி புனைந்து கொண்டேன்
சீவல்லி புத்தூரில் — பரம
    சிவனிரு பததலையுங கவனஞ் செய்தேன்
திருச் செந்தூரில் வந்தேன் — முருகரைத்
    தியானித்துக் கொண்டு அதி மத்தி யானத்திலே
கருஞ் செந் தூரை விட்டேன் — அக்கியானை
    கடந்து விட்டேன் வழி நடந்து கொண்டேன்

ராமேச வரமுங் கண்டேனே — முராரி
    ராமலிங்க சேவித்து நாம மிட்டேன்
போமேச நுதல்கள் விட்டேனே — பாவத்தைப்
    போக்கிக் கொண் டேன்வடக்கு நோக்கிக் கொண்டேனே
திருஙகே தாரதையும் — கண்டு
    தொழுதே வினைகள் தீர்ந்தேனே
உருக்கே தாரம்விட்டேனே — தீவினை
    ~~ஒழித்துவிட் டேன் மெள்ளத் தெண்டனிட்டேனே~~
~~பாவித்த~~
    ஒழித்துவிட் டேனகலி தொலைத்துவிட்டேனே
காளத்தி நாதரையும — கண்ணாரக்
    கண்டுகொண் டேன்மெள்ளத் தெண்டனிட்டேனே
பாவித்த வினைகளெல்லாம் — பருதிமுன்
    பனிக்குலம் போலவே தணிந்த்தையா
ஆரூர்த் தியாகரையும் — சேவித்து
    அகத்தில் வினைதனை மஙகவிட்டேனே
தேரூர் வீதியுள்ள — கும்பகோணத்
    தெருவில்சி வலைக்கண்டு கருதிக்கொண்டேனே
திருவரங கத்துக்குவந்தேனே — புனலையாற்றில்
    தீர்த்தமாடி ரஙகரைப் போற்றிக் கொண்டேனே
அருணா சலத்தினிலே — இருக்கும்
    அண்ணாமலை நாதர் உண்ணாமுலையாள்
திருவடி தலையடைந்தேனே — மறுநாள்
    திருப்பதி கண்டுதிமகருப் பதிவிட்டேன்
தரணியில் செய்தபாவம் — போக்கும்
    தலத்தைச்சே வித்துமவரு பலத்துடனே
திருத்தணி வேலருடன் — பதத்தையும
    தெரிசித்துக் கொண்டுனும் ஒருபுத்தியாலே
கருத்தணி தனைக்கடந்தேன் — நல்ல
    கண்ணூர் மாரிபதம் விண்ணப்பஞ் செய்தேன்
கச்சிப்ப தியில் வந்தேன் — அவிடத்தில்
    கம்பநாதர் பாதத்தையுங் கும்பிட்டுகொண் டேன்
கச்சைப் பதுமையாள் — என்று
    காமாட்சியைப போற்றிக் கடாட்சமும்பெற் றேன்
தில்லைப் பதியில்வந்தேன் — சிதம்பரத்
    தேவர்பொற் பாதத்தைச் சேவைசெய் தேன்
முல்லைப் பூக்கமழும் — கழுக்குன்ற
    முத்தூ ராரிட பாதங்கண் டேனே

திண்டோ தரன்போலே — திருச
சிராப்பள்ளி யிதுமொரு ராப்பள்ளி தான
கொண்டே னெழுந்திருந்தேன் — சீரங்க
கோவிந்த நாதனைச் சேவைசெய் தேன
அருள்சேர் கருவூரில் — பசுபதி
யவனிரு பதத்தையும் சேவைசெய் தேன்
தருவளர் கொம்முடிவாழ் — மருடலிங்கர்
தாளைக்கண் ~~செக~~ டேன்செவ் வேளைக்கண் டேன்
தொலிசங் கோசையுள்ள — விருத்தாசலம்
துதித்துக்கொண் டேன்மனதில் மதித்துக்கொண்டேன
நுனிசெசு கோடடில் வந்தேன் — அர்த்தனாரி
ஈஸ்வரனைப் போற்றிமீறு வேஷமெடுத்தேன்

விருத்தம

பிறைகபூ ணிய னுககளை பீஜாட்சர முபதேசித்து
தனுகபெ யருள்மாமேரில் சண்முகன் றனைவாழ்த்தி
பனுகமே ருவில்அர்த்த பாகரைப் போற்றி செய்து
புனுகமே அகற்றுந்தெய்வ பூசுரன்போ லுற்றேனே

சிந்து

பஞ்சாங்கப் பாபபானைப் போல் — வேஷங்கொண்டு
பட்டுக் கரைச் சோமன் மடி வைத்துடுத்தி
அஞ்சாமல் நாமந் தரித்தேன — அதுக்கு மேல்
அருக்கையாய்ச் சிகையையும் பருக்க வைத்தேன
பிளருமெ பூணூலுடன் — குல்லாத் தரித்துப்
பேச மறை தான் படித்துப் பூசுரன் போலே
தங்கவளை கையிலணிந்தேன் — பெங்களூர்
சால்வையை மேல் விசிறி மெல்ல நடந்தேன்
கொஙகுலகில் புகழ் படைத்த — திருச செங
கோட்டினி விருந்து வழி கேட்டு நடந்தேன்
சஙக கிரிதீ துர்ககம அடுத்தேன் — வாணிபர்கள்
தாவஷ்டிகம் மிருந்த சந்தைப் பேட்டையில் வந்தேன்
அங்கே யொரு பாப்பாரையன் — நமஸ்கரிக்க
அக்ஷணத்தில் நானுமொரு கொச்சிதங் கொணடேன
உங்களு றெந்தூா ரென்றான் — நான்தான்
உமத்தூர் என்றவுடன் நாமமே தென்றான
சங்கராச் சாரியரென் பேர் — வேத
சாஸ்திரமுங கற்ற பிர்ம கோத்திர மெனறேன

இங்கே வந்தது நீரென்றான் — இந்தவூரில்
இங்கிதஞ்சேர் கலியாண மங்களமென்றான்
என்றவுடன் நானுமெழுந்தேன் — அந்தவீடு
எந்த வீடென்றொரு சந்தில் நுழைந்தேன்
நின்று கொண்டு எந்த வீடென்று—கேட்கவும்
நிச்சயமாகத் தானுமந்த மச்சு வீடென்றான்
கண்டு கொண்டேன் நின்று நடந்தேன் — கலியாணக்
காரியங்கள் செய்யுமவர் வீரியங் கண்டேன்
குண்டுச் செம்பு கையில் பிடித்து — மணவறையான
கும்பு கூடிக்கொண்டு பாப்பார் நம்பி யிருந்த
சந்தடியில் வந்து இருந்தேன் — உப
சாரமுடனே நயமாகாரமுஞ் செய்து
எத்தூர் எத்தூரென்றார் — நானும்
இங்கிதமி குந்தசீரங்கமென்றேன்
வள்ளி வள்ளி யென்றவுடனே — நல்ல வேட்டை
வாசகத் திருவுளக் கடாட்ச மென்றேன்
எண்ணி மனதில் நினைத்தேன் — நாம சும்மா
இப்படி யிருந்து விட்டால் எப்படி யென்றே
திக்கெங்கே நானு மெழுந்தேன் — வெகு
சக்கிரமா கத்திருட்டு மார்க்க மெடுத்தேன்
உக்கிராணம் தன்னில் புகுந்தேன் — பார்த்து நானும்
உச்சிதமி குந்திலங்கும் மச்சு மேல் சென்றேன்
பெட்டிகளை நாலஞ்சாறு கண்டேன் — நல்ல
வேளைகளைக் கண்டெனக்கு நல்வாழ்வு மென்றேன்
கெட்டியாக நானும் அவிழ்த்து — பார்த்தேனதில்
கொண்டை போட்ட சால்வைகள் ரண்டு சோடி
பட்டுக்கரைச் சோமனுமஞ்சு — சூடுந்தலைப்
பாலிவுமொரு சூறு சோடு பாவையுடுத்தும்
பட்டுக ளஞ்சாறு சோடு — நகம் பொருந்தும்
பத்து விரல் மோதிரங்கள் பத்துச் சோடு
தாவடங்கள் எட்டுச் சோடு — குப்பிகள் பத்து
சடைவில்லை பதினெட்டுக் கடையமூ மெட்டு
மேவிய முத தொண்டிகளும் பத்து — சரமெட்டு
மெட்டிகளேழெட்டுச் சோடு அட்டிகை ரண்டு
சாத்திரைகள் நாலு சோடு — ரண்டு சோடு
தாயத்தூக மெனைகயில் வாய்த்ததையா
கோதறுநல் மூக்குத்திகள் — பொன்னோலை
கொப்பு மெட்டு தங்க[illegible] நாண் முப்பதுசோடு
இப்படி யனேக நகைகள் — படைத்தவன் போல்
எடுத்தேனே வெகு திடத்துடனே

எப்படியு மிந்த மடியிலெ — ராவெதனிலெ
எத்தனையென றிலாதொரு மொத்தை கட்டினேன்
கட்டினதைத் தோளில் போட்டேன் — உகிராணக
காரன் முகத்திலேநான் காரியுமிழ்ந்தேன்
பொட்டெனவே வெளியில் வந்தேன் — இந்த மட்டும்
போது மென்று நானுமொரு காதம் நடந்தேன்
வெள்ளியுத யங்காணுமுன் — நல்ல நல்ல
மேட்டிமைசேர் படைவீடு தாட்டியே வந்தேன்
மெள்ள நடந் தோடியே வந்தேன — பானுதைய
வேளையிற்கு மார பாளையங் கண்டேன்

விருத்தம்

இலககணக கவிஞர் போற்றும் இறையவன அருள்மாமேனி
தலத்தினில் வாசமான சண்முகன் றனைவாழ்த்தி
நலத்துடன அவிழ்தலுப்பார்த்து நகையெவளாய கணகலை சாதது
வீரக்கிர யங்கள செய்த மேன்மையை உரைத்திடேனே

சிந்து

பேரு பெற்ற நகரந் தன்னில் — புதுப்
பேட்டையிலேவீடு காட்டியே வந்தேன்
ஆருயிரம பொனவிலை சொல்லி — உடைமை
அத்தனையும் வித்தேன் குரு மூர்த்தி கடையில்
அந்த ரொக்கமாகக் குரு — மூர்த்தி செட்டி
ஆறுயிரம் பொன் கொடுத்துத் தாராள னென்றான்
முத்த மிட்டுத் தொடை தட்டிக் கொண்டு — ஒரு
முடிப்புக் கட்டிக் கொண்டேன எடுததுக் கொண்டேன
ஆறு பத்து நூறு பொன் கொண்டே — காவிரி
அடுத்தேனே பதம படுத்தேனே
பரிசல் துறைக்காரனுக்கு — ரண்டு
பரங்கி வராகந்தனை யெறிந்து விட்டேன்
ஆடிப பெருககில் ஓட்டினான் — நானும்
அககரையிலே யிருந்து இக்கரை வந்தேன்
கூடு துறை தனில் மூழ்கிப்—பவானி —
கூடலிங்கர் பதந்தனைத் தேடியே வந்தேன்
கோவில் வல மாக வந்தேன் — ஒற்றைக்
கொம்பனிரு பதத்தையும் கும்பிட்டுக் கொண்டேன்
நாவலர்கள் வந்து பணியும் — நன்
நாவுடையாளரைப் போற்றிப் பண்ணு மொழியின
திருச்சந் நதி முன்பாக — பரத
நாட்டியத் தொனியைக்காதில் கேட்டு மகிழ்ந்தேன்

(வேறு சந்தம்)

சீதமதி மாமுகந் தன்னை — வெகு
சீக்கிரமாய்க் கண்டுமவள் மார்க்கமுங் கண்டேனே
காரைப் பழித்த குழல் மின்னுள் — அந்தக்
கம்பியன காமம படர்ந்த பெண் மயிலாள் தானே
மாரன் கைத் தனுப்புருவத்தின் — நடு
மததியில் கஸ்தூரிப் பொட்டை வைத்திருந்தாள் தானே
வல்லியிரு ஸ்தனியத்தைப் போலே — இந்த
~~மணலிடை~~
மண்டலததில் நானுமிக கண்டதில்லை தானே
இல்லை இல்லை இல்லை இல்லை தானே — இவள்
ஏற்றுத்னத் துக்குவமை நானென்றும் காணேனே
இட்டமுடன் கிருஷ்ணன் கண்டாலோ — ~~கைதி~~ வைகுமி
எட்டிப போரை விட்டுதெ தாலி கட்டிக கொள்ளுவானே
சட்டமுடன் தந்திமுகன் கண்டால — நல்ல
தாரமென்று கலியாண காரியஞ் செய்வானே
மாதவர் மகாமுனிவர் கண்டால் — தவம்
மாற்றியவள் வீடுதனில் காத்துமிருப் பாரே
பாத சிலம்பு கலீரெனன — பதம்
படிதநுப் படித்துக் கொண்டுநடித்துக் கொண்டாளே

விருத்தம

பண்ணவனு மருள்ளை லப்பன் எங்கள் பரமனுர் அறுபக் சொல்வேன் உன்னையில்
விண்ணுலகை விட்டுவந்த தெய்வநம்பை விரகத்தால் மெலிந்தன இறுமாசென்னி
அண்ணலொன்று தானறுத்தான் மற்ற நானும் அறுப்படா இவ அந்நயாவிடடால்
எண்ணிஎண்ணி என்மனது புண்ணுகதாக இறைவனுந் தலையொட்டி எழுதினுனே

சிந்து
/வேறு சந்தம்/

நாட்டியத் தொழில்மார்க்கம் — செய்கிற
நயனங்கள் அதுவெரு நவினமதாய்
பாட்டக முத்தணியும் — நட்டுவனர்
பரதசாஸ் திரமுறைப் பாங்கிலேயும்
சதிராடும் இலக்கியமும் — பயவ்வேயவள்
சதிசெயு மடதாளப் பதிவும்
திந்தாளத் திமிதரிகட — தோகிறதகிட
சஜத செஜுத திருடிகு வெனவே

சரளியில் தோடிவர்ணங்கள் — மககரி
சரிகம பபதநி சசநிதா பகமபா
பிரபடிகளு முள்ள — பலவகைத்
தொழிலுடன் பெககணி பொக கணியுடனே
ரூபக மட்டியமும் — சாப்புத்தாள
நோக்கமும் பாக்கமும மார்க்க மய்யா
ஆபரணத் துடனே — தேவசங்க
ராபர ணமும்பிற தாபமில ங்க
யமுனை கலியாணி — அட்டாணிகள்
ஏர்க்கலைக் காம்போதி சுரத்துடன் நடித்து
சமனுய்ப் பிடிக்கிறதும் — வராவளியில்
தக்ககட் டமுகிமளம தரிக்கொட்டி கேயோ
அபிநயம பிடித்தாளே — கஞ்சாவும்
அபினி தின்னவன் போலே கவனமுற்றிறன்
உபசா ரப்படிகள் — நடத்தின
உச்சிதமுங் கண்டவோ மெச்சிக் கொண்டேனே
சனுமே யேஸ்பரிக்கு — மங்களமென்று
தடடமெடுத்தே அவள பட்டிச சிந்து மடித்தாள்,
"மங்கை சிரோமணியே — நீயுமிங்கே
வாரு' மென்றேன்; "நீங்களெந்தூா' ரென்று கேடடாள
"தரணியில் புகழ் படைத்த — திருவளர்
சாரங்க பாணியுள்ள ஸ்ரீரங்க' மென்றேன்
"திருநாம மேதென்றாள் — கேட்கவும்
திட்டெனவே "என்பெயர் சுப்பைய' ரென்றேன்
பூவையரே உன் பெயரென்ன — சொல்' லெனவே
புன்சிரிப்புக் கொண்டுமவள் ஒஞ்சரிப்பதாகவே
"தேவடியாக் கள்ளர் தினமும் — புகழும்
தெட்டி முத்தாள் பெற்றெடுத்த செட்டி முத்தாளாம்"
என்று சொல்லி நின்றாளய்யா — "உன் னுடைய
வீட்டில் வர வேணு' மென்று கேட்டேனே
நனறெனவே வீசி நடந்தாள் — மாதவள்
நான் தொடர்ந்தேன் நாய்முயலைத்தான் தொடர்ந்தாப்போ
வந்தேனவள் பின் தொடர்ந்துதான் — அவள்யிலில்
மார்க்கமிருந்தாய்க் கிழவி சீக்கிரமாகவே
"எந்தூரோ என்சாமி நீர் — இங்கே வர
எத்தனைபூ சாபலங்கள் பெற்றே' னென்றாள்
கோடுநிக ராவணமைமார் — தாதியர்கள்
கொண்டிருகைத் திண்டு ரெண்டு கொண்டு வந்துதான்
போடவும் சவுக்கை மீதிலே — துரைப்பாங்கு
போலிருந்த வேலைகண்டு மாவமாய மாய்

ளவுகரு நீரேஜமான — என்று சொல்லி
வைப்பேன் மருமகனென் றெப்பாரி சொல்லியே
பழமது நழுவிப் பாலில் வீழ்ந்த
படியென்று தானிந்தப் படிகூறினள்
கணபதி யார் பூஜை — செய்தவர்க்குக்
கைகரு முன்னே காரியம கிடைகரு மென்றாள்
பணமென்ன பாஷாணம் — உங்களிட
படசங்கெட்டி முத்தாருக்கு லட்சம்பொன் றுமே
வறுமைச் சுரமகற்ற — திரவிய
மாத்திரை நானென னேர்த்தியா யெண்ணி னள்
தொறுவாய்க் கிழட்டோரி — ஒழுமுழத்
தோப்பு முந்தத் தாய்க்கிழவி யேப்பமிட்டுத தான
சாடையாய்த் தாய்க்கிழவி — போனவுடன
சைகை கணடு கெட்டிமுததாள் செய்கை நதிபோல
ஓடிவந்து என்ஜாமி நீ — என் படுக்கை
வீட்டில் வர வென்று சீமாட்டி பேசினள்

விருத்தம

கோட்டானை முகத்தானுக் கிரையானைக் குடத்தானைத் தெல்குருப்பு
நாட்டான் அருளானைத் துதித்தானை யென்றூனை நன்றூரில்
காட்டானை பிடிக்கவென்று வீட்டானை வைத்திருந்த கன்னி மாய்கை
போட்டானை அஞ்மேறி வருந்தானே படுக்கைமனை புகுந்தேனே

சிந்து
/வேறு சந்தம்/

கெட்டிமுத்தாள் தளமதியில் — பண்டுமாதம்
கெட்டியாக நானிருந்தேன் அட்டியில்லாமல்
தட்டியே பணம் பறிக்கவே — பொட்டிமகள்
திட்டமாகத் தேடுகிறாள் காட்டு மூலிகை
பாதாள மூலிகையுடன் — கஞ்சாங்கோரை
பச்சிலை மருந்து கரு நொச்சியுடனே
வேதாந்தச் சிறுமூலிகை — நலல
வெள்ளெருக்கன மதில் வரு புல்லுருவியும்
கண்டாரை வல்லாளையும் — தினந்தினமும
காம வெறி கொள்ளு முருட் டாமை நிணமும
சண்டையுடன் கிருமத்தைச் சாறு — நல்ல
சூரசுவனை யுளச்சுருங்கி ஆதண்வேரும்
பொழுதுதி ரும்புமெயும் — மந்தைப் பிலிகள்
பொன்னுங்காணித் தழைகளும் பொனனுரைகளும
தும்பை யெருசிங்கியும் — தொட்டாச்
சுருங்கியுடன் காடமுருங்கைப் பிசினும்
கோட்டானதுை ஆந்தை நிணமும் — ஒந்தியெலும்பும்
குருவி அலகும்வண்ணான் குருவி நிணமும
பாந்தமுள்ள கன்னி நிணமும் — அவுசாரி
பல்லுக விடதுகண்ணி வுள்ளபூவையும்
கட்டியெல்லாம் சேர்த்தி யரைத்து — குளிகை பண்ணி

கொண்டுமேவன் என்னுடைய அண்டையில் வந்து

~~காட்டாமல் வாழையிலையில் — சோற்றிலே~~

காட்டாமல் வாழையிலையில் — சோற்றிலே .

கள்ளு வெறி போலவது தள்ளவுங் கண்டு

வல்லபத்தி லேகரடிதான் — புததான சோறு

வாங்கினது போலப் பொருளை வாங்க நினைத்தாள்

கல்லுருகி னுலுமனது — நெஞ்சமது

கரையாத வல்லிரும்பு கரைந்ததையா

தொங்கு முலைத் தாய்ககிழவிதான — பொக்கைவாய்த

தொண்டி யென்னைக் காசை யெல்லாம் கிண்ட நினைத்தாள

அங்கவ சீகரனே நீ — வைத்திருக்கும்

ஆரிலை தரித்த பணி யிரவலினி

என்று சொல்லிச் சொன்னளையா — அதற்கு நான்

ஈந்த பணம சொல்ல வெளி தாகுமோ ஐயா

அன்று மேகரு மார் நகரில் — உடமை விற்று

ஆயிரம் பொன்னையும தாராளமாய்

கொந்தள வோலைக்கு — நூறு பொன்

குப்பி பண்ணக் குமிழினி வராகன் முப்பது

அந்த யிருந்த சட்டிகைக் — கன்பது பொன

அட்டிகைக்கு ஓர் முடிப்புக் கட்டியே ஈந்தேன்

மோகன மாலைக்கு நூறுபொன — சரங்கள் பண்ண

முன்னூறு பொன்னவளுக் கெண்ணியே யீந்தேன்

வாகாவ சரவலிக்கு — ஐம்பது

வராகனையும் எண்ணியே பாராமல் கொடுத்தேன்

தங்கவளைக் கெண்பது ரூபாய் — கால்சரம்

தண்டையஞ் சிலம்புக்கொரு கண்டுமீந்தேன்

சிங்க இடைக் கொட்டியாணம் — பண்ண நல்ல

செஞ்சிநகர்ப் பணநூற் றஞ்சு பொன் னீந்தேன்

நட்டுவ னுக்கென — ஐம்பது பொன

நாகரங்கள் வேறு மெனருள் சேகரம பண்ணிக்

கட்டியொரு முடிப்பீய்ந்தேன் — தூங்கு மஞ்சள்

கட்டி யென்றும் வட்டிலென்றும் பெட்டிகளென்றும

பட்டு மெத்தை சமுக்காளம் — வெள்ளியினால்

பாத்திரங்கள் பலபல நேர்த்தியாக வே

தட்டுமுட்டுச் சாமான்கள் — வேணுமெனருள்

தண்ணீர் போல இருநூறு பொன்னையு மீந்தேன

கெட்டிமுத்துச் சரங்களென்றும — கொடிகளென்றும

கெண்டைப் பட்டுச் சேலையென்றும தண்டைகளென்றும

மெட்டிகை சிந்தாக்கு — வேணுமென்றும்

மூக்குத்த ஒக்குமென்றும் முருகு தோள்வந்தி

பட்டுகள் பீதாம்பர மென்றும் — சங்கீதமெல்லாம்
பாடிவைக்கும் பாட்டனுக்கும் வாத்தியா ருக்கும்
பட்டுக் கரைச் சோமனு மென்றும் — வெற்றிலை யென்றும்
பாக்குக ளென் றிவையெல்லாம் நீங்க ளாகவே
தாயக் கிழவிக் கஞ்சு பவுனிலே — செயின் வாங்கி
தந்தா லுனக்கு வெகு சொந்த மென்றாள்
வேசைகையுடன் தொண்டிமாருக்கு — சேலை தந்தால்
வீட்டிலெல் லாமுனக்குச் சலுகை யென்றாள்
இந்த வகைக் கறுநூறு பொன் — நான் கொடுத்தேன்
இளையவள் தான் செலவு சொன்னாளய்யா
எந்தனிட தனையனுக்குக் — கலியாணம்
என்று சொன்னாள் நூற்றிரண்டு பொன்னு மீந்தேன்
எங்கள்குல தெய்வமதற்கு — பொங்கலென்றாள்
எட்டுவரா கன்பணத்தை விட்டு மறிந்தேன்
மங்கையெனு மூதாலமயன — நோம்புக்கு
வாழைப் பழங்கள் முட்டைக் கோழியென் றும்
காதனுக் கரும்புறவும் — நாலு முட்டிக்
கள்ளுச்சா ராயமெட்டு வள்ளமு மென்றாள்
தாதியர்க்கு நூறு பொன் பெற்ற — பட்டுக்கரைச்
சாயக்கம்பிச் சேலை யைந்து வாங்கித் தரவும்
உப்பைத் தொட்டுக் கற்பூரங்கள் — வாங்குமென்று
உள்ள பணமத்தனையும் கொள்ளை கொண்டாளே
சப்பை வாய்த் தாய்க்கிழவி — பொட்டிமகள்
சாடையாக என்னை ஓடவகைசெய் தாளே
தலைதட விட்டேய மோழை — வாங்கிவிட்டுத்
தன்னுசி யாளென்ன பெண்ணுசை யாலே
உள்மெழு கது வானேன் — என் கையில்
ஒருகாசு மில்லை யென்று பரிகாச மாய்க்
கெட்டிமுத்துப் பொன் மயிலாள் — என்னக ~~[illegible]~~
கேலிகள்செய் தேதினமும் காலி பண்ணினாள்
கெட்டிகெட்டி நல்லவள் நீதான் — ஒருபணமும்
கேளாதிருப் பாயென்றேன் மேலுமவள்தன்
வேசியிட மனையினிலே — நடக்கிற
சாடை தெரியாத மட்டிபோடா பயலே
பேசாத பேச்சேசியே — சீ சீ
என்று வுனக்கு ரோசமுண்டோ வென்றாள்
தாசி பெற்ற மகளுக்குமே — தொண்டனிவன்
தாலிகட்டிக் கொண்டானோ வாலிபத் திலே
அசிமாறிப்பொட்டிமகள்தான் — தன்னுடைய
ஊட்டை விட்டு என்னையவள் தாட்ட நின்று

பொகைகை வாய்த தாய்க்கிழவி — என பேரிலே
போட்டிசெய் தேசனேடை மூட்டி வைத்தாள்
ருக்கவே போடா வென்றாள் — நானும்
குருவிழி விழித்துக கணைங் கிறுகிறுத்துத்
திக்கெனவே யெழுந்தேன் — பாவி
தெய்வத்துக்கு நாமென்ன பாவஞ் செய்தேனோ
பொக்கண முங்கையில் கொடுத்தாள் — தேவடியாள்
பொட்டிமகள் என கையில் முட்டி கொடுத தாள்

விருத்தம்

தஙகக்கட்டி மாஙகனி பலாப்பழம் தெனங்காய் மடல் நெற்கதிர் வாழை பூந்
தொஙகக் கட்டிய தோரணமாவிலும் துறைக்கு கன் மைத்துனன் கைவாளியாக
கொஙகைக் கட்டிக்கும முளிர்ந்த முகத்துக்கும் குருஞ்சித் தெருக்குங் கெட்டி

தங்கக் கட்டிபோல் ஆறுயிரம பொன்ந்த தாசிக சீறத்திலிரு

சிந்து
(வேறு சந்தம்)

திக்கெட்டும் புகழ் படைத்தவானி கூடல்
தெட்டி முத்தாள் பெற்றெடுத்த கெட்டி மூதாளாலே
பொக்கணமுங் கையிலெடுத் தேனே — நல்ல
பூச்சாண்டி வேஷத்துக்கு வாச்சாண்டி னேனே
வெம்புலித் தண் டையுங் கட்டி னேனே — நல்ல
விருது வெண் டையுங் கையில் பொருந்தத் தொட் டேனே
கம்பளிக் கயிறு கொண்டு நானே — இடையில்
கட்டிவிரி யம பாம்புச சடடை கட்டி னேனே
கடடு வர்க்கம் தொட்டு நடந் தேனே — ரண்டு
காதிலிரு வட்டோடு பொதிக்கலைத் தேனே
தடடுதடி கையிலெடுத தேனே — நல்ல
சுரைப்புரு டையுந் தோளில் புறந்தொங்கத் தானே
ருல்லாணையுந் தரித்தே னேனே — அதுவும்
கொங்கணத்தான் கூடுபோல யென் கன்னத்தில் தொஙகவே
புல்லாக் கொமபு சிங்க நா தங்கள் — கீழ்ழு
புட்டங் கடடிக கையில் தேங்காய்த் தொட்டியுங் கொண்டேனே
மல்ல கம்பம போல் வளர்ந் தேனே — கால
வயிரவன் வேஷத்துக்குத் தயிரியவா னேனே
கல்வுவிச் சித்தனென்றுப் பரானேன் — அல
காலவயி ரவன்தன கோலமுங கொண டேனே
தொட்டவீர மட்டுங்கத தானே — யாரும்
துதிக்கும வானிகூடல் எதுத் துறை சென் றேனே
பொட்டென்று குமாரநகர் தன்னில் — வந்து
புகுந்தேனக் கிராமமெல்லாம் நான்தான சுத்திப் பார்தது
முட்டுகள் துக்காணி வாங்கி னேனே — தேங்காய்த்

தொட்டி ரம்ப நல்லரிசி கொட்டியமென றேனே
ஒட்டத்தமை செய்து கொண்டு நானே — கையில்
சூரிகத்தியால் தலையைக் கீறிக் குத்துய போது
கொருலுமெகல் லா மதிக்கத் தானே — நல்ல
கும்பினி சர்க்கார் படுத்துரை அவனுணயாலே
திருகலும்த் துரைத்தனஞ் செய் வோர்கள் — வர
வந்து செங்குந்த முதலிமார்கள் அங்கனேவந் தார்கள்
கண்ட போது என்னடாபூ சசாண்டி — சும்மா
காராட்டுப் பூவைப்போலே போராடாதே யென்று
கெண்டி ராயன் பண்டு பணந் தந்தார் — நல்ல
கர்த்தி மானைக் கும்பிட்டு வாழ்த்திக் கொண்டு தானே
நேர்த்தியான சோறெடுத்துண் டேனே — அங்கே
நில்லாமல் குமாரநகர் எல்லை கடந் தேனே
நாற்றிசை மதிக்க நடந் தேனே — இந்த
நாற் காதமெனக்கு மொரு கால்களுதந் தானே
செண்டடித்தாப் போலநடந் தேனே — பெரிய
சேலமுங் கடந்து வெலிச் சேலமுங்கண் டேனே
அண்டினவர் தங்கள் கலிதீர்க்கும் — நல்ல
அருணசலத்துககினித் துரிதாய் நடந் தேனே
சுருக்காக நாளும்நடந் தேனே — நல்ல
குருக்கக் குதிரை போலே திருப்பதிகடந் தேனே
சிறப்புள்ள தேவாசிக நாதந் — தன்னைத்
தெரிசிக்கவே அந்தப் பரிசைக்கண்டேனே
எந்தவூர் எத்தலமென் றேனே — நாங்கள்
எத்திசை மதிக்கும்கா சித்தலங்க ளென்று
அந்தத் தலம் பார்கக வென்று மென்றேன் — நல்ல
தாச்சு கூட வாவென்று வாய்ச் சேதி சொன்னார்கள்
பாருலகந் தான்மதிக்கு மந்த — காசி
பட்டணமே எக்குமொரு எட்டுக் காதம் போலே
காரிருண்ட வனங் கடந்தேனே — வட
காசிவிசு வேசர் பதம்பூசித்துக் கொண் டேனே
மங்கை விசாலாக்ஷி யம்மன் — தன்னை
வணங்கித் தோத்திரஞ் செய்துபணிந்து கொண் டேனே

விருத்தம்

திசைபுகழ் அருள்மாமேரில் தேசிகன் தன்னை வாழ்த்தி
விசுவநாதர் தன்னைப் போற்றி மிக விசாலாட்சி தன்னை
நிசமெனத் துதித்துக் கொண்டு நிச்சயமாகத்தானே
நசமுள்ள காசிவீதி சுற்றியே பார்த்துற்றேனே

சிந்து
(வேறுசந்தம்)

அழகுள்ள காசிதனில் — முன்னூற்று
அறுபது வீதி பிரபலமும்
களபகஸ்தூரியுள்ள — அரண்மனை
கட்டுமெட்டு வெகு திட்டமையா
ரதகச துரகங்களும் — பதாதிகள்
ரவிதமும் நல்ல நவநிதிகளும்
குதிரைத் தள கர்த்தரும — கோட்டை
குறிதளஞ் செய்யு மவர் களுக்குங் கண்டேன
துலுக்கர் மராட்டியரும் — குடகரும்
தெலுங்கர் வடுகருடன் கலிங்கியரும்
மலுக்கர் வங் காளருடன் — உக்கிர
வார வெடிசசேவுகர் வீரியமும
பாரா நடக்கிறவா — பூசசாண்டி
பண்டார மெந்தவு ரென்ற வுடனே
~~பேரும் சொன்னேன் திங்களுரும் சொன்னேன்~~
பேரு ரவிகுசி — தலமெனும
பேருஞ் சொன்னேன் திங்களுருஞ் சொன்னேன்
அரண்மனை வாசலிலே — நடக்கிற
ஆக்கினை அரண்மனை நோக்கங் கண்டேன்
இரவில் களவாட — வருவமென
எண்ணியே சோறெடுத் துண்ண நடந்தேன்
கடைவீதிகள் தோறும் — கடைக்கொரு
காசு கொடுக்க என்றேன கூசாமலே
ஆட்டா பூச்சாண்டி — சும்மா
அதைக்கிக் கதைககி யேண்டா கதக்குகிறாய்
இந்தா காசு மென — அவர்கள்
ஈந்த வுடனே கையை யேந்தினனே
சந்தோஷ மாச்சுதையா — நல்ல
சாதமும் வாங்கியே போதவுண்டேன்
இரவிதான் போய் மறைய — அம்மாசை
இருட்டுக்குள் திருட்டுப் புரட்டுஞ் செய்ய
தலைமூடி எந்திரமும் — கள்ளத்
தந்திரமும் நலல மந்திரமும்
மெச்சவே திலத மிட்டேன் — என்னுடை
மித்துருக்கும் சத்துருக்கும் எத்திசைக்கட்டும
கச்சை யுறை தனிலே — இருந்த
கள்ளக் கோலியுமிடை தன்னில் சொருகி
சொக்குப் பொடி யெடுத்தேன் — நானும்
சுருக்குடன் கசசை கட்டி இறுக்கிக் கொண்டேன
திக்கெனவே எழுந்தேன் — காசியில்
திருட்டுக்கு நானொரு திருடனென்று

சுரங்கத்தின் வாசலிலே — சொருகுப் பொடி
சூத்திர மந்திரத்தைத் தூத்தி விட்டேன்
சுரங்கத்தின் மனிதனைப் போல் — காசிராசன்
தூக்கத்தில் சொக்கி விழ மாறாகக் கண்டேன்

விருத்தம்

வரம்பெற்ற மாமுனிவர் ஓதுதிங்கள் மாநிலத்தில்
வந்தருளா சவப் பிராணா
கரம்பற்றி மலரெடுத்துக் கொண்டுதூவி
கருத்திலே யிருத்தியினிக் காசிராசன்
விரும்பிப் பொன் னமைத்த பளிக்கை வீட்டை
மின்னு கனகச் சோலதனுல் சென்றிட்டேனே
சுரங்கத்தின் வழியாக வந்துபுகுந்து
துணிவுடனே களவுசெய்யத் தொடங்கினேனே

சிந்து

மன்னர் கிரீடபதி — மகராசன்
மாளுக்க கச்சேரியின் ஓலக்கத்தை
சொன்னால் வாய் மணக்கும் — துரைமகன்
தூங்கு மஞ்சம் மீதினில் பாங்குடனே
நித்திரை செய்கின்ற — துரைமகன்
நேர்த்தியை நானங்கே பார்த்தேனையா
சத்தி குல வசீகரன் — கொண்ட
சத்தியுஞ் சிவனும் போல் நித்திரை செய்தான்
மச்சமே வேறிக் கொண்டேன் — பார்க்கவும்
வாசனை பெட்டிகள் பொன்காச்சமரம் போல்
வச்சிர கடயங்களும் — நல்ல
வளமுள்ள பணிதிருட் பளபளென்ன
தங்கச் சரப்பணியும் — அரைப் ~~பள்ளணி~~ நாணும்
சாதி முத் தொண்டிகள் சோதியின்ன
செங்கையில் முருகுடனே — தேகத்தைத்
திரை கொளவும் நதிலுவும் பிறையுடனே
பெட்டியிலே யிருந்த — உடமை
பூட்டிக் கொண்டேன் தலை யாடிக் கொண்டேன்
சட்டம தாகவுமே — சால்வை
சரப்பணி முருகுடன் கரப்பணியும்
முத்துத்து ராய்கள் வைத்த — யாவையும்
முகத்தில் பளபளப்பாய்ச் சுத்திக் கொண்டேன்
சித்தருருபனைப் போல் — நானும்
தேடியே நிலக் கண்ணாடியிலே
மூத்த தலைமகன் போல் — என்னை
முன்னழகையும் பின்னழகையும்
பார்த்தேன் மனதார — இந்தப்
பார்த்திப னழகிலும் நேர்த்தி ஐயா

பணத்தையும் விளக்குமுன்னே — நோட்டங்கள்
பார்த்துக் கணக்குக் கட்டிச்சேர்த்தயோ
கணைகளுடன் கோட்டைவெட்டு — நூறுபொன்
ராசிப்பணம் நூறுபொன் நேசமுடனே
ராசகோபாலி நூறுபொன் — வீர
ராயனு நேயம தாயிரம பொன்
பேசிய மதுரைப் பணம் — நல்ல
பேட்டைப் பணங்கள் நூற்றஞ்சு பொன்னும்
உருந்தூர்ப் பணம் நூறு — பொன்னுகள்
ஒயிலுடன் மயிலையன் பணம் நூறு பொன்
வளம்பெறுஞ் சலுத்தாணி — நூறு பொன்
வாய்ப்புடன் கெண்டிராயன் ஐற்பது பொன்
முடியதை முடித்துக்கொண்டேன் — மேல்மிச்சம்
முப்பது பொன் கெண்டிரயன் ஐற்பது பொன்
தடத்துச் செலவுக்கினி — வேணுமென்று
தனியேமு டித்து வெகு களிவுடனே
சிட்டுப் பறந்தாற் போல் — காசித்
தேசத்தை விட்டுமொரு மாசத்திலே
பட்டணந் தாண்டிவந்தேன் — சக்கிர
பாணித்துறைக் கஞ்சபொன் காணிக்கைதந் தேன
மறுநாள் எழுந்திருந்து — பெங்களூர்
யாட்டினி சாம்பனி தாட்டிவந் தேன்
தருவாயிலே கண்டுவாய் — தாண்டவும்
தையல்கெட்டி முதுதாள் மீதில் மையலாமேன்
கொங்கோ ரிவை நிறைந்தேன் — எனது
கொஞ்சபுத்தி யாலேயினி அஞ்சற்காரன் போல்
சலுதாய் நடந்து வந்தேன் — காவேரி புரம்
தாட்டியே வடகரை நாட்டில்வந் தேன்

விருத்தம்

செந்திரு மடந்தைபோலும் திங்கள்மா நகரில் வாழும்
சந்திரசே கரனுர்பெற்ற சண்முகன் றன்னை வாழ்த்தி
விந்தைசேர் வாளியூரில் மெல்லிதன் மனையைத்தேடி
வந்ததா னவளுக்கீந்த வளமையை உரைத்திட்டேனே

சிந்து

வடகரை நாட்டிலுயர் — திரு
வாளிகூட லுக்கினி நானும் வந்து
கடைவீதியிற்புகுந்தேன் — அந்தக்
கன்னிகை யாரிட தன்மனையில்
போந்தேன் புலிப்பாலே — புலிதான்
போனுக்குள் சிக்கவே தானுங்கண்டேன்
காந்தாரி சத்திழுடி — வந்து
கைபிடித்துக் குமபிட் டையாவென்று

அப்பா மருமகனே — வா நீ
ஆற்றிலொரு காலுஞ் சேற்றிலொரு கால்
வைப்பாரோ லைசாயி — நீயும
வாடிக்கை யாகவே கூடிக்கொள்ள
கெட்டிமுத்து மாதுதனை — விலைக்
கிரைய மாகமுறி தாரமென் றாள்
செட்டிமுத்தா ளோடிவந்து — என்னைக்
கெஞ்சியே உன்னிட தஞ்சமென் றாள்
பொறுத்தார் அரசாள்வார் — இன்னும்
பொங்குவார் பங்கப்பட்டே மங்கு வாரே
பொறுமை பொறுத்த துரை — உன்னைப்
போலே கிடைக்குமோ ஞாலத்தி லே
கோபம் பொறுக்க வேணும் — ஆசை
கொண்டவர்க்கு ரோசமுண்டோவென் றாள்
சோகவிடாய் தீர — நேற்றுச்
சொப்பனந் தன்னிலே மெய்ப்புட னே
சாமி வரவுங்கண்டேன் — எங்கள்
தாரித்திர தோசமுந் திரக் கண்டேன்
காம வெறியோடே — கண்ணில்
கட்டிவைத்தால போலே கொட்டு தையோ
செய்த குற்றங்குறையை — சொல்லத்
தீருமென்றாள் மையல் தீருமென் றாள்
கொய்த மலரணைமேல் — என்னைக்
கூடிக்கு லாவிமுத் தாடிக்கொண் டாள்
வைபோக மாகவுமே — ரண்டு
மாசமு மிநேசம தாயிருந்தேன்
பொய்பொருந் தவையுரைத்தாள் — யாரோ
போட்டிக்கு என்னுட வீட்டையுமே
கன்னம போட்டுப் பாவிமகன் — எந்தக்
கள்ளனோ உள்ளன்முதல் உள்ளதெல்லாம்
பொன்னுடமை பூஷணமும — தங்கப்
பொட்டியிலே நானும் இட்டு வைத்ததை
கண்டது கண்டாப் போல் — என்னைக்
காணும வேகொண்டு போனாரே
என்றாள் கிழட்டோரி — பொய்கள்
எவ்வள வாகிலும் சொல்வதில்லை
அப்பா மருமகனே — என்று
அய்யய்யோ வென்றொரு பொய்யுரைத்தாள்
நெற்பா ருலகமதில் — இனி
நெஞ்சை யொளித்தொரு வஞ்சமோவென்று
காவாடிப் பொட்டிமகள் தான் — என்றன்
கண்ணைப் பிசைந்தவள் என்னைத்தான்

மேலான பொன்னுடைமை — வேண்ட
வெப்புவித்துப் புலியாருமே
கெட்டிமுத்து மாமயிலுக்கு — நல்ல
கெட்டிமுத்துச் சபர்ந்தான் பூட்டமே
அட்டிகையும் பொன்காரை — முத்து
அன்னத் தருகை போலப் பண்ணுவனே
ஒன்றும் லபிக்கவில்லை — நானும்
ஓட்டாண்டி யானேனே தெட்டினிலே
என்றுமே பேழை வாய்ச்சி — அவளுக்கு
ஈந்த னையா பணம் நேர்ந்தனையா
எண்ணித் எண்ணித்தானே — ஈ
ரெட்டு நூறு பொன்னையும் விட்டெறிந்தேன்
கண்ணே கண்ணின் மணியே — உந்தன்
கையிலுள்ள தெல்லாம் வையுமென்றாள்
கெட்டிமுத்து மாமயிலாள் — என்னைக்
கெடடிக்கார னென்று தெட்டிவிட்டாள்
கெட்டபதேர எளாய் — நானும்
கெட்டுமுட்டைச் சாம்ப லானேனே

விருத்தம்

தெள்ளுசெந் தமிழோர் போற்றும் திங்கள்மா நகரில் வாழும்
வள்ளிதெய்வ யானைகந்தன மகிமையை வானியூரில்
கொள்ளையாய்ப்பணந்தனையானும் கோதையற் கீந்தபின்னை
தட்டிவிட் டிடவேயிந்தச் சனிபல வென்றுங் காணேன்

சிந்து
(வேறு சந்தம்)

தெட்டிமுத்தாள் பெறற மகளுக்கு — வெகு
சீர்பெறு வியாழதிசை பார்வையது தானே
அஷ்டமச் சனிய னும்வந் தென்னை — தொட்ட
தாகையால் பொருளெல்லாம் பெண்மாயை யாலே
~~கொடுத்தேன்~~ முட்டியொன்றும் கையில் எடுத்தேனே
~~கோல்~~முட்டி கடைந்ததில் குறுமுட்டி நுழைந்ததைப்
பட்டபாடு சொல்லி முடியாது — என்ன
பாவஞ்செய்தேனோ முன்செய்த தீவினையோ காணேனே
அந்தரோக்க மாகப்பொரு ளெல்லாம் — வானி
ஆற்றிலே கரைத்தபுளி யாச்சுதென்றே ஒன்ன
மொத்தை மொதையாகக் கொடுத்தேனே — என்னை
மோசஞ்செய்தாள் தாசிமகள் தானே
ஓநமசிவாயா பரமேஸ்வரனே — கையில்
ஓடிருக்கு தென்கையில் ஓடு கொடுத்தாயோ

மானபங்கப்பட போனேனே — சாமி
    வட்டவாசிகளு மாவிடுக்கவே ராதிக்கம்புக்கும் சேதம
சாரங்க பாணிநுரையிலே — உனக்கிஷ்டமான
    தாசனென்ற பேருமொட்டுத் தாசனென்று வருத்தாய்
பூரணனே நாலுமறை யோனே — உனக்கு
    அஞ்சுதலே யில்லையெனக் கஞ்சுதலே யாச்சே
வாலியே பெண்ணாலிறந் தானே — என்ற
    வார்த்தை யறிந் தாலுமவ வாத்துக்குச செல்லேனே
சீவமுடி ராவணனும் அன்று — அந்தச்
    சீதையா லிறந்தானென்ற சேதியுங்கே ளேனே
கீசகனென்பவன் இறந்தானென்ற — சேதி
    கேட்டாலோ கெட்டிமுத்தாள் வீட்டிற்குச்செல் லேனே
ஆசைகொண்டு பெண் மீதிலே — தேவேந்திரன்
    காயிரங்கண் ணாகவந்த மாயமறி யேனே
பெண்ணாலே கெட்ட பேர் — மெத்தவுண்டென்று
    பெரியோர்கள் சொன்ன வாக்கியம் தெரியாமறபோனேனே
தொண்ணூத்தடி கையிலெடுத் தேனே — வெகு
    தூடிகள் பெறவே மேற்கே தடம்பிடித் தேனே
சமையபுரத் தவளாய்ப் பேட்டை — தாண்டி நானும
    தடத்தில் வருகவே போத திடத்தினி லேறச்
செம்மையான இருங் கையில்பிடிக் காமல் — வெகு
    திறத்துடன ஒற்றைப் பாப்பான் குறுக்கேவந்தி டவே
புரட்டுக்குள் ஆந்தை யொத்தை — சத்தமது
    போடவே யிதற்குமென்ன கேடுகால மென்றேன்
குறுக்கேயுங் கொடியிட மாச்சே — தீக்
    கொள்ளியுங் கொண்டங்கே ஒரு குள்ள நாவிதன் வந்தான்
கெடுமதி கண்ணுக்குத் தோன்றுது — யார்க்கும்
    கேடுவரும் போதுமதி கெட்டுவருந் தானே
அன்றெழுதும் வேதனென் தலையில் — பின்னே
    அழித்தெழுதப் போறானோ தட்டுப்பளி கடந்தேன்
என்றைக் கிருந்தாலும் இனித் தானே — சும்மா
    இறப்பது மெய்யென் றெண்ணி விரைப்பாக நடந் தேனே
சத்திமங்கலம் தனக்கங் கோட்டை — ரண்டும்
    தாண்டியே பூதிப்பைக்கு ஓட்டமாக நடந்தேன்
வெற்றிபெறத் தொடைதட்டிக் கொண்டேன் — கிண்டி
    மீசையை முறுக்கிக் கையை வீசிநடந் தேன்
கெச்சரட்டிக் கணிவாயும் தாண்டி — ஒரு
    கேக்கையிட்டுத் தண்டும் பாதை மார்க்கம் பறறி நடந்தேனே
அச்சணம வயிறறுப் பசியாலே — நல்ல
    அம்மணியம்மாள் சத்திரத்தில் தர்மச்சோறு வாங்கி
உண்டபின் சற்றேயிளைப் பாறி — நானும்
    ஓட்டத்தில் நஞ்சுண்ட கூடல் தாண்டி நடந் தேனே

மண்டபீகர் கண்டேகா தண்டர் — தினம்
வாசமான மைசூர்க்கெடி வாசலில்சென் றேனே
கோட்டைகள் கொத்தளமும்கண் டேனே — துரை
கொலுவுங் கண்டேனவர் வலுவுங்கண் டேனே
பேட்டைக வெல்லாஞ் சுற்றிப் பார்த்தேனே — வேதப
பிராமண ரகிரார வீதி தராதரமும் பார்த்தேனே
தீட்டுஞ்செந் தமிழ்நாவலர் போற்றித் — தினம்
தியானமே செய்யும் மைசூர் சமஸ்தானமே சத்திய
மேட்டிமை யாகநடந்து வந்தேன் — அந்த
வேளையில் குதிரைப் பாகியமுங் கண்டு
பக்கிரியென்று வேஷமுங்கொண் டேனே — நல்ல
பச்சைக் கல்லுக்காவில் கட்டிக்குச்சுக்குல்லாத் தரித்து
கைக்கிசைந்த தண்டெத்தடி கொண்டேன் — எந்தன்
கழுத்துக்குப் பாசியை அழுத்திக்கொண் டேனே
கச்சப்புரை பொக்கணத்தி லேதான் — சடை
கஞ்சாவுங் குடுகுடுக்கை கஞ்சா ரொட்டி அபினி
உச்சிதத் திலதமு மிட்டேன் — இடையில்
உடைப்பட்டை யுங்கட்டியே திடத்துடன நடந்தேன்
குதிரைபி டிக்கக்கடி வாளம் — கையில்
கொண்டுநடந் தேன்குதிரைத் தண்டுப் பாளையந் தன்னில்
அதிகவீற் பராக்கிரம சூரன் — நல்ல
அசாரத் துக்கானு சாயபு சேனு மகராஜன்
தூரகத்தைக கண்ணிலே நான்கண்டு — நல்ல
சுழிசுத்த மொன்றுமே பழுதில்லை தானே
இருந்ததே பாகியங்கள் தோறும் — அங்கே
எல்லாஞ் செயவே அல்லா அல்லா என்றேன்
ரட்டைத்துடுத் துக்கானி தந்தாரே — குதிரை
ராவுத்தர் திறத்தையெல்லாம் ராவெத்தவே பார்த்தேனே
மட்டிலாப் படைக்கிச் சரு தாணி — ஆக்கும
வல்லவன் உசேனுகான் நல்லமிக ராசன்
கூடாரந் தன்னில்சென் றேனே — வெகு
குணத்துடன நல்லவரென்று வணக்கஞ் செய்தேனே
தாடாளனும் செனுசெக்கு சாயபு — மிகத்
தன்னிமையாக நானென் னைமுந்தந் தாரே

விருத்தம்

கொக்குமா துங்கள்வாழை குலாவிய திங்களூர்வாழ்
முக்கண்ணன் அருள்மாமேரில் முருகர்தன் கிருபையாலே
பக்கிரி வேஷமாற்றிப் பரிதனைக் களவுசெய்ய
திக்கென இருட்டில் யாரும் திருடவே நினைந்துற்றேனே

சிந்து

திக்கெனவே தானெழுந்து — குதிரை
திருடவே நானந்த இரவில் வந்து

சொக்குப்பொடி கையிலெடுத்தேனே — படைமன்னா
ஞானகத்தைச் சோதித்துப் பராக்கிரமித்து
அசுவந் தனையெடுத்து — டிணைத்தில்
அச்சமற்றுக் குதிரையை நொச்சுக்கூடினேனே
சுமையா யிருந்ததையா — முதுகைத்
தடவியே பின்கால்தான் நெட்டை வாங்கியே
கால்கயிறு தனையறுத்தேன் — குதிரைகளுக்கு
கடிவாள மிட்டேனையா தடையில்லாமல்
ஆக்கிரமித்து அனுமானித்து — குதிரையும்
ஆட்டங்கொண்டே வெகு சேட்டை செய்யவே
வேந்தா என்றறிந்து தான் — குதிரை
மிரண்டு தையா படை திரண்டு தையா
கூக்குரல் சத்தமாகவே—அங்கனே
குதிரையை விட்டு நானும் பிதுரு கெட்டு
சீக்கிரமாய் நடந்தேன் — அவ்விடத்தில்
சேவுகர் வீரியர் காவலரும்
இதோ வரான் கள்ளனென்று — சேவுகன்
என்னைத் தொடரவே சனி பின்னைத் தொடர
சதி வந்து நேர்ந்தவுடன் — எனனிட
தந்திரமும கள்ள மந்திரமும
புதை புதை யாய் நுழைய — என்னிட
பொக்கணத்தி லேயிருந்த சொக்குப்பொடி கள்
மதிகெட்டுத் தான்பறக்க — எனனிட
மந்திரமு மருந்துகள் எந்திரமும்
சனியன்முன் எதிர் நிற்குமோ — தெய்வந்
தானிற்குமோ யென்ன தா னிற்குமோ
சனியன் பெரியவன் காண் — ஈசனைத்
தலையோட்டில் இறந்துணன் டலைய வைத்தான்
கிருஷ்ணன் வெண்ணை திருடி — உரலுடன்
கெட்டியாகக் கயிற்றில் கட்டியேவைத் தான
தேவேந்திரனுக்கு — ஆயிரங்கண்
தேகமெல் லாமவன் ஆக்கிவைத் தான்
மாவலி வாணனவன — தனது
வல்லமைய டங்கிப்பூ மிக்குள்ளேவைத் தான்
சந்திர னுடலிழந்தான் — நல்ல
சரசமன மதனும உருவிழந் தான்
ஐந்து தலைப் பிரமன்றனையும — அவன
ஆக்கிரமித் தொருதலை போக்கியேவைத் தான்
இரவிதன் பல்லை யொடித்தான் — அன்று
இரணியனை நகத்தில் அரிவகுந் தான்
தரணியி லனைப் பிடித்த — இந்தச்
சனியனும் விடுவானோ இனியென் னமோ
என்று சொல்லி யினொட்டம் புதைக்குள் — நுழைந்து
கொண்டிருந் தேனேவெகு பெருந்தேளும்

திருதிரு எங்க மகாடடவும — அடவடகள்
    செய்யாரும் பூராரும பையர வும
கடித்த கடித்ன வாயில் — வலி(தயா)யுன்றுங்
    காணேனே புத்தி தோனே னே
துபெககாக வேசேவுகர் — தலைமேல்
    தொடர்ந்துசு ருக்காகவே நடந்துவர் ஜீ து
கள்ளவிந்த இண்டம் புதைகளுள் — இதமாங்க
    காணுமென வெருவன காணே னென ருன
வெள்ளை செய்யும வனனுன்துறை — முசல்போல
    விருகரு விருககெனருநா விருககவு மே
சேவுகர் வீரியரும் — இண்டடு
    செடிக்குள் நுழைந்தென்னைப் பிடித்துக் கொண்டு
தாவியே கட்டியிறுக்கி — சும்மா
    சண்ணுமென் பார்சிவம் கொண்ணுபோயிடன் பார்
ருத்தென் பார்சிவர் பேர் — இவனைக்
    கொல்லவே துரையப்பனை இல்லையு மென்று
கர்த்தா சமூகத்துக்கு — இடைகட்டிக
    கட்டியென்னைக் கொண்டுபோய் விட்டவுட னே
தளகர்ததர் மதிமந்திரியர் — பிரதானிக
    காபபடை மன்னா வுாணியத் ரும
வளமுள்ள காணிககாரங்கள் — அஸ்தக
    வர்ரவெடி சேவுகர் வீரிய ரும்
கண்டா ரென்முகததை — திருட்டுக்
    கள்ளனுட கரமும துள்ளிவிழ வே
துண்டந்துண்டமாக வெட்டுங்கள் — என்றவுடன்
    துரைமன மிரங்கியே திருடனை யும்
மாறுகாலும் மாறுகையும் — வாங்குமென்று
    வாக்குப்பி றந்தவுடன் சீக்கிரமாய்
கூறிவருந் தலையாரி — என்னையவன்
    கொண்டுவந்து கானகத்தில் கண்டிதஞ் செய்து
ஒற்றைப் புளியமரம் — அதன்கீழ்
    ஒற்றைக் கையும ஒற்றைக்காலும பற்றியறுத் தான்
கொறறவ னெதிராலே — கால் தறித்துக
    குறிகாட்டி யேவெரு திறமைபெற் றன்

விருததம்

நதியணி அருணமா மேரில் நாதனே பரனே என்றன
சதிகள வதனுல் கால்கை தறித்திடப் பரதவித்தேன்
மதியினுல் வாழ்வாருணடோ வையகந் தன்னிலேதான்
விதிதனை வெல்லப போமோ விசாரமாய்ப் புலம்பலுற்றேனே

~~அகவல்~~

அகவல்

பாவிநான் வனத்தில் பதைபதைத் திடவே
தாவியே பிடித்துத் தூயாரிமார்கள்
கானகந் தன்னில் கைகா வதனை
ஊமையாய்த் தறிக்க உருவது குலைந்து
முடவனைப் போலே முடங்கியே கிடக்க
வடதே சத்தில மருவிய காசி
தன்னிலே யிருந்து சனங்கள் வந்தார்கள்
என்னையே பார்த்து இப்படி யேனென
என்றுதான் உரைக்க விபரமாய் மொழிந்தேன்
நன்றென அவர்களை நானினிப் பார்த்து
எந்தவூ ரென்றேன் இருப்பதுங் காசி
அந்தண ரென்றார் அவர்களைப் பார்த்து
இங்கு நீர் வந்த தேதென்று கேட்கக்
கொங்கு மண்டலத்தில் குறுப்பு நாட்டில்
திங்கள் மாநகரில் சிறந்த சிவாலயம்
அங்கே யோரடிக்கு ஆயிரம லிங்கமும
தெப்ப வாவிகளும சிறந்த தடாகமும்
ஒப்பிலாத் தங்கமும உயர்ந்த உப்பரிகையும
சித்திர மண்டபமும் சிகரகோ புரங்கள்
இந்நகர்க் கிணையென இயம்பியே எடுத்துச
சொன்ன வாயில் சொறியுமே புளுகர்
அன்னக ரதுக்கிணை யான் சொல்ல மாட்டேன
இன்னமுச சிதங்கள் இருக்குது கேளும்
இந்திர புரியில் இமையவர் முதலாய்
த் சந்திரப் புரிக்குத் தான் வரு வாரே
திங்களூரதற்குத் தேவர் செல்லா விடில்
அங்குதானே தேவர்க் கமுதமு மெங்கே
எந்தா ரதுவும் ஈசனார் முடியில்
இந்தா ரதுபோல் இலங்கவும் காணேன
அம்புலி யதுபோல் அநேக நட்சத்திரம்
அம்புலிக் கிணையென் றதைச் சொல்ல லாமோ
அந்நக பதிலே அருள்மலைப் பெருமையை
இன்ன தென் றெடுத்து இயம்பவு மாட்டேன
[illegible] ஏறு மென்ன அறிந்த மாத்திரங்கள்
நானே உனக்கு நவிலுவேன் கேளும
மகமே ருவுக்கு வடபாரி சத்தில்
தகைமையா யருள்மலை தானுண் டுளது
அந்தமா மலையே அரனுக்கு மோன
மந்திரஞ் செபித்து மகமே ரதுவாம்
இந்த லோகத்தில் இந்து மா நகரில்
அந்தமா மலைபோல் அருள்மலை யுளது
இம்மலை இதுபோல் ஈசனை முகத்தருள்

அம்மை முகத்தருள் அருள்மலை யானது
ஆகையால் ஆறுமுகம அசுரனைச் செயித்தத
தோகைமா மயில்மேல் தோன்றிய மலையாம்
இந்த நல் மொழியை இது நிசமென் றும்பர்ச
சந்திரா தித்தனை நானுள்ள வரைக்கும்
இந்திர பதத்தில் இருந்து நாளீ முடிவில்
முந்து சா யுச்சியம முத்திப் பெற் றிருப்பார்
ஆகையால் நாங்கள் அந்நகர் தேடி
வேகமாய் வந்த விபரமென் றுரைத்து
அருள்மலை மீதில் அங்கு நீ சென்று
முருகனைப் போற்றி முத்தி பெற் றிடவே
உன்திட கைகால் ஒரு நொடியளவில்
இனிதுடன் வளரும என்றுதா னுரைத்து
இம்மருந்து பரித்துநல் எண்ணெயில் அப்பி
பலகனிச் சாறும் ~~[illegible]~~ வார்த்திட
கைகால் புண்ணும் கருந்தழும் பேற
மைபோல் மலையினில் மரமது கொண்டு
பொருந்தின் காலின் பொருத்தவே பூட்டிக
எழுந்திடே நடந்து ஏறுப்பு நன் வீட்டில்
வந்துதா னிருந்து மா நகரெய்தி
சந்தனச சலையில் தானங்கள் செய்து
இருள்மலை யகற்ற இறைவ னின்று
அருள் மலை யான ஆறுமுகக் கடவுள்
சந்நதி முன்பால் தறியமரம் போலே
நின்றுதான வீழ்ந்து நெடுந்தவம் புரிந்து

திருமகள் மருகா சேனு பதியே
முருகனே ஆறு முகவனே-பரனே
மோன மந்திரத்தில் முளைத்த செந் திருவே
கானகக் குறத்தி கணவனே குகனே
குஞ்சரி கந்தா குமரா காங்கயனே
சஞ்சல மகற்றும் சடாச்சரப் பொருளே
ஐயுங் கிலியு மான பரனே
மெய்யுங் கிலியும் வீற்றி ருந்தவனே
கண்ணுக்குள்ளே கருணைச் சுடரே
விண்ணுக் கப்பால் வெளியிலு ற்றவனே
தசை நரம் புக்குள் வீற்ற மெய்ப் பொருளே
திருநீ றிடவே தினநாள் படவே
வருவாய் வருவாய் மயிலே றிய பவா
பெற்றதாய் தந்தை பிள்ளையை வெறுத்தால்
மற்ற தாய் தந்தை வளர்த்திட லுண்டோ
அன்னையும் நீயே அப்பனும் நீயே
என்னுள் ளத்தில் இருப்பவன் நீயே
உசவ துணையே புகழ்வது முனையே

பேசவு ஆகாயே பிதற்றவு ஆகாயே
தோலவு ஆண்டே ஆதிப்பது முண்டே
வல்வினை யதனால் வருந்தினேன் ~~ஆண்டே~~ ஐயனே
வேலா யுதனே வேணன் சேரிடவே
காலமு வரமு காட்சி தந் தருள்வாய்
என்றுதான போற்ற விறையவனை அருள்தேர்
குன்றிலே ஒருகால் கொடுத்து முன் னெக்குட்
பேர் நொண்டி யென்று பெருமையாய்த் திங்கள்
ஊர் நொண்டி யென்று பேருங் கொடுத்திடவே

கந்தமே மிருந்த கடப்பமா லிகையால்
கந்தவேள் கருணை கடாச்சமுற் றவன் மேல்
அயிசைகள் சேர்வீர பாகேந்திரனறன்
வமிசத்தி வேந்த செங்குந் தர்கள்தம்
குலக்கொழுந் தான குள்ளையன் ~~தன்னை~~ றனயன்
இலக்கணத் தொகையால் இவியவி ளசி
நாவல ருவைன் நன்னூல் தெரிந்து
பாவின மெழுத்தும் பயனசைச் சீரும்
பந்தம் அடிதொடை பகர்ந்தசெந் தொடையால்
செந்தமிழ் மாலையைச் சேர்க்க வல்லவன்
எழுத்தின் விகற்பமும் இயைபு களெல்லாம்
பழுதறப் பார்த்துப் படித்த கம்பீரன
பஞ்சகா வியங்கள் படித்த நாவலன்குகன்
கஞ்சமலர்ப் பதங்கள் கருத்திற் சேர்ப்பவன்
நற்றமி ழாலே நாத னருள்மலைக்
கொற்றவனை மீதில் கூறிய நொண்டியை
நாட்டியஞ் செய்தேன் நாடுகே டோரும்
பாட்டியல் கேட்டுப் பரிசதந் தாரே

வாழி

ஆகம புராண கலை வாழி — எங்கள்
அருள்மலைக் குமர குருபர னும் வாழி
கந்தன் வள்ளிதெய்வ யானை வாழி — "கரிய
காளியுங் கொண்டத்துக் காளி வாழி மிகவாழி
பார்புகழ் நொண்டி நாடகந்தன்னை — தினம்
படித்துக் கொண்டு நடித்தார்கள் வாழி
இன்பமுடன் காதினில் கேட்டபேரும் — அதை
எழுதிப் படித்த பேர்கள் கிளையெல்லாம் வாழி